ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 41.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகை

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

ஸம் 4 | மேமீ 1952 நந்தனஹு வைகாசிமீ | 5 இதழ்

## ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்தியா?

எம்பெருமானாருளிச் செய்த ஸ்ரீபாஷ்யமானது “இதி ஸர்வம் ஸமஞ்ஜஸம்” என்று தலைக்கட்டுகிறது. அதன்மேல்

“இதி ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசிதே சாரீரகமீமாம்ஸாபாஷ்யே சதுர்த்த ஸ்யாத்யாயஸ்ய சதுர்த்த: பாத:; ஸமாப்தச்சாத்யாய:. சாஸ்த்ரஞ்ச பரிஸமாப்தம்.”

என்கிற வாக்கியங்கள் ஸ்ரீ கோசங்களிலிருக்கின்றன. இவை ஸ்வாமி ஸாதித்த ஸ்ரீ ஸூக்தியாக இருக்க ஔசித்யமில்லை; ஏனென்னில், “ஸ்ரீ பகவத்ராமாநுஜ விரசிதே” என்று தமது திருக்கையினால் ஸ்வாமி எழுதியருளமாட்டாராதலால். ஆகவே இவை அந்யதீய வாக்யங்களாகவேயிருக்கத் தகுமாகையாலே இவற்றையும் ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ ஸூக்தியாகக் கொண்டு அநுஸந்திக்க நியாயமில்லையென்பது சிலருடைய அபிப்பிராயம். அப்படி அபிப்ராயப்படுகிறவர்கள், கோஷ்டிகளில் ஸ்ரீ பாஷ்ய ஸமாப்தி ப்ரகரணத்தை ஸேவிக்க ப்ராப்தமாகுங் காலங்களில் மேலே குறித்த வாக்யங்களை ஸேவியாமல் “இதி ஸர்வம் ஸமஞ்ஜஸம்” என்றவளவோடே நிறுத்திப் போருகிறார்கள். ஸத்ஸம்ப்ரதாய ஸித்தர்களான மஹான்களோவென்னில், “இதி ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசிதே............சாஸ்த்ரஞ்ச பரிஸமாப்தம்” என்னுமளவும் அநாதிகாலமாக ஸேவித்து வருகிறார்கள். இதின் ஔசித்யத்தை விளக்குகிறோம். ஸ்ரீபாஷ்யம் ஸ்வாமி திருக்கையினால் எழுதியருளப்பட்டதன்று; ஸ்வாமி அருளிச்செய்துவர, கூரத்தாழ்வான் ஏறியருளப் பண்ணினதென்று வைபவக்ரந்தங்களில் ஸ்பஷ்டமாகக் காண்கிறோம். ஆகவே ‘இதி ஸ்ரீபகவத்ராமாநுஜ விரசிதே’ இத்யாதி வாக்யங்கள் கூரத்தாழ்வான் பணித்தவையேயன்றி யாரோ சில வழிப்போக்கர்கள் எழுதிவைத்தவையல்ல. ஆழ்வானுடைய அருளடியாகவே உலகுக்கு ஸ்ரீபாஷ்யம் கிடைத்ததாகையாலே ஆழ்வானுடைய இந்த ஸ்ரீ ஸூக்தியும் ஸ்ரீ பாஷ்யகார திவ்ய ஸூக்தி நிர்விசேஷமாகவே அநுஸந்தேயமென்பது பெரியார்களின் திருவுள்ளம்.

“பகவத்ராமாநுஜ” என்னுமிந்த வ்யபதேசத்தில் சிலர் ஒரு சங்கை செய்வதுண்டு. ஸ்ரீபாஷ்யத்தின் ஆரம்பத்தில் “𑌅𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌮𑍁𑌖𑍍𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌃..........𑌭𑌗𑌵𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌵𑌤𑍍” [அதோ ப்ரஹ்மசப்தஸ் தத்ரைவ முக்யவ்ருத்த:..........பகவச்சப்தவத்] என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. ப்ரஹ்மசப்தம் போலவே பகவச்சப்தமும் எம்பெருமானிடத்தில் தவிர மற்றையோரிடத்தில் ப்ரயோகிக்கத் தகாதென்று தேறுகின்றதே; இப்படியிருக்க, “பகவத்ராமாநுஜ” என்று ஆழ்வான் எங்ஙனே ப்ரயோகித்தார்? என்று.

இதற்குச் சொல்லுகிறோம். ப்ரஹ்மசப்தத்தையும் பகவச்சப்தத்தையும் அந்யத்ர ப்ரயோகிக்கவே கூடாதென்று ஸ்வாமி அருளிச் செய்திருக்கவில்லை. “𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌮𑍁𑌖𑍍𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌃; 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌤𑌦𑍍𑌗𑍁𑌣𑌲𑍇𑌶𑌯𑍋𑌗𑌾𑌦𑍌𑌪𑌚𑌾𑌰𑌿𑌕𑌃” [தத்ரைவ முக்யவ்ருத்த:, தஸ்மாதந்யத்ர தத்குணலேச யோகாத் ஔபசாரிக:] என்றே அருளிச்செய்திருக்கிறார். அன்றியும் “பகவத் போதாயநக்ருதாம்” என்பதே ஸ்ரீ பாஷ்யத்தின் உபக்ரம வாக்யமாகவுள்ளது. போதாயநரிடத்திலே பகவத் சப்தத்தைச் சேர்த்து ஸ்வாமி ப்ரயோகித்தருளியிருப்பதை யநுஸரித்து ஆழ்வான் “பகவத்ராமாநுஜ” என்று ப்ரயோகித்ததில் அவத்யலேசமுமில்லையென்று உணர்க.

# ஆசார்யஹ்ருதய பாட ரஸங்கள்.

எந்த நூலிலும் பாடங்கள் பிறழ்வது பல காரணங்களினால் ஸம்பாவிதம். பரம்பரையாகக் கற்றுவருகிற உபய வேதங்களிலுமே பல பாட பேதங்கள் ஸம்பவித்துள்ளனவென்பது காணுகின்றோம். அர்த்தத்தில் அநர்த்தம் நேராதபடி இரண்டு மூன்று நான்கு பாடபேதங்கள் கண்டாலும் குறையொன்றுமில்லை. வக்தாவுக்கு உத்தேச்யமான அர்த்தம் தலைகீழாம்படியான பாடபேதம் கண்டால் தவறான பாடத்தைத் திரஸ்கரித்து, உண்மை வாய்ந்து உரிமைபெற்றதான பாடமொன்றை ஸ்தாபிக்கவேண்டியது ப்ராமாணிகர்களும் ரஸிகர்களுமான ப்ராஜ்ஞர்களின் பணி.

ஆசார்யஹ்ருதயமென்பது அத்விதீயமான சாஸ்த்ரம். அநேகவித யோக்யதைகள் பொருந்தியவர்களுக்கே இது நிலமானது. ஆராய்ச்சியற்றவர்களும் ஆசார்ய பரம்பரையிற் பணிந்து கேளாதவர்களுமான சிலர் அச்சிட்டுள்ள பதிப்புகளைப் பரம ப்ரமாணமாக மயங்கி அவற்றிலுள்ள தவறான பாடங்களையே ஆதரிக்க விருப்பமுடையார் (சிலரோ பலரோ) இருக்கலாம். அன்னவர்கள் ப்ராமாணிகர்களும் ரஸிகர்களுமாக இருந்தால் நல்ல பாடங்களைக் கேட்டவாறே உள்குழைந்து உருகி உகக்கவே நேரும்,

அடியேன் இந்த திவ்ய சாஸ்த்ரத்தில் சிறிது பரிச்ரமம் எய்தி நல்ல பாடங்களை ஆங்காங்கு நல்லாசிரியர்கள் பக்கலில் பெற்றுப் பேரின்பமெய்தினவன். ஸ்வேச்சையாக ஒரு திருத்தமும் செய்திலேன். அற்புதமான வியாக்கியானமியற்ற அஸாதாரணமான திறமை பெற்ற மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் இந்த திவ்யக்ரந்தத்திற்கு மிக அழகியதாக விளங்கும்போது ஒருவரும் இதில் ஸ்வேச்சையாகப் பாடங்களைக் கற்பனை செய்ய முடியாதென்பது திண்ணம். அந்த வியாக்கியானத்தோடு நன்கு இணங்கக் கூடிய பாடத்தைப் பின்புள்ளார் பலர் பல காரணங்களினால் இழந்தார்கள். அடியேனும் சிலநாள்வரை இழந்திருந்தவனே. மாமுனிகளுக்கு அடியேன்மீது விலக்ஷணமான க்ருபாவிசேஷமுள்ளதனால் அந்த தௌர்ப்பாக்யத்தில் நின்று நீங்கிச் சில மஹநீயர்களின் பரமக்ருபையினால்

பலபலவிடங்களில் உண்மையான பாடங்களை உணரப்பெற்று அவற்றை உலகுக்கு உபகரித்தவன் அடியேன்.

இன்னமும் திருத்தமுறுத சில பாடங்கள் இந்த திவ்யக்ரந்தத்தில் உள்ளனவென்பதும் அடியேனுடைய எண்ணம். ஆனால் ஸ்வதந்திரமாக ஒரு திருத்தமும் செய்யத் துணிவுடையேனல்லேனாதலால் சிலவிடங்களில் எனது உரைகளில் ஸந்தேஹமாகவே விட்டிருக்கிறேன். இதற்கு ஓரிடம் இங்குக் காட்டி நிற்கிறேன்.

நான்காவது ப்ரகாணத்தில் ஐந்தாவது சூர்ணையில் [ஆவாவென்று தானே இத்யாதியில்] "மேவிப் பரம்புமவரோடொக்கத் தொழில்" என்றே எங்கும் பாடம் காண்கிறது. இதில் திருப்தி பெறாத அடியேன் எனது உரையில் (ஸாரப் பதிப்பு பக்கம் 261ல்) எழுதியிருப்பதாவது :—

"மூலத்தில் (மேவிப்பரம்பு மவரோடொக்க) என்ற விடத்தில் சிறிது பாடப்பிறழ்வு இருக்கும்போல் தோன்றுகிறது. 'எங்கும் பரந்தன' என்கிற விஷய வாக்யத்திற்குச் சேர (மேவிப்பரவுமவரோ டொக்க) என்று பாடமிருக்க வடுக்கும். விஷய வாக்கியத்தில் 'எங்கும் பரம்பினதொண்டீர்' என்றிருந்திருக்குமாகில் (மேவிப்பரம்புமவரோடொக்க) என்கிற பாடம் ஏற்கும். மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தினாலும் (பரவுமவரோடொக்க) என்கிற பாடமே ஸித்திக்கின்றதாகத் தோன்றுகின்றது. பிராமாணிகர்கள் ஆராய்க.' என்று.

அடியேன் ஸ்வேச்சையாகப் பாடங்களைத் திருத்தும் துணிவுடையேனாகில் இங்கு அடியேனுள்ள முகந்த பாடத்தைப் புகுத்தியே வெளியிட்டிருப்பேன். அது அடியேனுக்கு ப்ராப்தமுமன்று, பழக்கமுமன்று. பெரியார்களது உபதேசத்தினாலும் சிறந்த ஓலை ஸ்ரீ கோசங்களினாலும் கிடைத்த பாடங்களை மாத்திரமே அடியேன் வெளியிட்டிருக்கின்றேன்.

இப்படி வெளியிட்டுள்ள சில பாடங்களில் சிலர் தெளிவு பெறாது நிற்றலால் அவர்களைத் தெளிவிக்கவேண்டியே இந்த வியாஸம் வரைய நேர்ந்தது.

மூன்றாவது ப்ரகரணத்தில் 160 "மண்ணோர் விண்ணோர் வைப்பில்" என்றிருக்கவேண்டியபாடம் 'வெற்பில்' என மாறிச் சில பதிப்புகளில் உள்ளது. இது மிகவும் அயுக்தமானது, சிறிதும் பொருத்தமற்றது, வக்தாவின் திருவுள்ளத்திற்கு அடியோடு இசையாதது, வியாக்கியான ஸரணிக்கும் சிறிதும் ஏலாதது என்று கேட்டு, வைப்பில் என்கிற உண்மைப்பாடமே வெளியிடப்பட்டுள்ளதடியேனால். இங்கு (வெற்பில்) என்பது பாடாந்தரமாகக்கூட இருக்கத்தகாததென்பதையும் அது அவசியம் அகற்றப்படவேண்டிய தவறான பாடமென்பதையும் இங்கு விரிவுக்கஞ்சாமல் விசதமாக நிரூபிக்க எழுகின்றேன்.

திருவாய்மொழியில் "தண்ணார்வேங்கட விண்ணோர் வெற்பனே" என்று பாசுரமிருப்பதால் அதற்குச்சேர இங்கு (வெற்பில்) என்றிருக்கவேணுமென்று சிலர் ப்ரமிக்கலாம். ப்ரக்ருத சூர்ணை திருவேங்கட வெற்பைப் பற்றியே அவதரித்துள்ளதனால் (வெற்பில்) என்றல்லது வேறுவிதமாக இருக்கவே தகாதென்றும் சிலர் நினைக்கலாம். இதெல்லாம் மிகத் தவறான நினைவுகளென்பதை இனி ஊன்றியுணருமின்.

இந்த க்ரந்தமானது அருளிச்செயற் பாசுர மயமானது. ஒவ்வொரு வார்த்தையும் திவ்யப்ரபந்தப் பாசுரங்களையும் இதிஹாஸ புராணாதிகளையும் வடிவாகக்கொண்டது. இங்கு

(மண்ணோர் விண்ணோர் வைப்பில்) என்றது இரண்டு பாசுரங்களை மூலமாகக் கொண்டது. (1) "கண்ணாவனென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு." (2) "தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு." என்கிற இவ்விரண்டு பாசுரங்களையும் மணவாள மாமுனிகள் உதாஹரித்தருளியுள்ளார். மூலத்தில் (வெற்பில்) என்கிற பாட மிருந்திருக்குமானால் *வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு* என்கிற திருமழிசைப்பிரான் பாசுரத்தை மாமுனிகள் உதாஹரித்தருள ப்ரஸக்தியே கிடையாது.

நநு, மூலத்தில் (மண்ணோர் விண்ணோர்) என்றிருப்பதனால் அந்தச் சந்தை *கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்திலிருந்தாலுங் கூட, (வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு) என்கிற நான்முகன் திருவந்தாதிப் பாட்டிலுமிருப்பதால் இதைக்காட்டுதற்கே மாமுனிகள் இந்தச் சந்தையையும் உதாஹரித்தருளினர்; வைப்பு என்பதைக் கொண்டல்ல. என்கிறோமென்னில்; இது ஒவ்வாது. மாமுனிகள் இந்தச் சந்தையை உதாஹரித்தவளவோடு நிற்கவில்லை; "உபய விபூதிக்கும் நிதியான திருமலையிலே" என்று (மாமுனிகள்) மூலத்தின்மீது அர்த்தமும் விளங்க அருளிச் செய்துள்ளார்.

(வெற்பில்) என்கிற பாடமிருந்ததாகில் அதற்கு உரிய சந்தையை மாமுனிகள் காட்டியிருக்க வேண்டுமே. அதைத் தொடவேயில்லையே. [தண்ணார்வேங்கடவிண்ணோர் வெற்பனே) என்ற சந்தையை யெடுத்துக்காட்டியிருந்தாலன்றோ வெற்பில்பாடம் ஏற்புறும். மாமுனிகள் அந்தச்சந்தையை நெஞ்சிலும் நினைத்திலரே. மூலத்தில் எந்தச்சொல் உள்ளதோ, அந்தச்சொல் தொடையுண்ட பாசுரத்தை மாமுனிகள் காட்டாதிருக்கிற இடம் ஒன்றுகூட கிடையாதே. இங்கு (கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு) என்று உதாஹரித்திருப்பதானது மூலத்திலுள்ள (மண்ணோர் விண்ணோர்) என்கிறவளவுக்கேயாகும். (வெற்பில்) என்றிருந்து அதை நோக்கியிருந்தாராகில் (விண்ணோர் வெற்பனே) என்றவரையில் உதாஹரித்தே தீருவர். அஃதிலாமையால் இங்கு (வெற்பில்) கிடையவேகிடையாதென்று நிச்சயிக்கத்தக்கது.

நநு, (வெற்பில்) என்பது இங்கு அந்வயிக்காமல் போகவில்லையே. பாசுரத்திலுமுள்ள சொல், திருமலைக்கும் வாசகமான சொல். இது இருந்தாலென்ன? இதைத் தள்ளி (வைப்பில்) என்கிற பாடத்தை ஸ்தாபிப்பதில் என்ன சுவை? என்று கேள்வி பிறக்கலாம். இது யுக்தமான கேள்வி. வைப்பில் என்பது இங்கு இருந்தே தீரவேண்டுமென்பதை மாமுனிகள் தாமே இன்சுவை மிக நிரூபித்தருளியிருப்பதால் இக்கேள்விக்கு இனி நாமுணர்த்தும் ஸமாதானத்தை அறிவுடையார் குறிக்கொள்க.

இந்த சூர்ணையில் (வைப்பு) என்பதே உயிரான வாசகம். (விவரணம்) திருவாய்மொழியாயிரத்தில் ஆழ்வார் மங்களாசாஸனம் செய்தருளின திருப்பதிகள் 28. அவற்றில் விளங்கும் திருக்குணங்களை தனித்தனியே 28 சூர்ணைகளில் அருளிச்செய்கிறார் மூலகாரர். முதல் நான்கு திருப்பதிகளில் பரவ்யூஹ விபவ அந்தர்யாமி குணங்கள் விளங்குவதாகவும் மற்ற 24 திருப்பதிகளில் ஸாதாரண குணங்கள் விளங்குவதாகவும் மூலகாரர் திருவுள்ளம் பற்றினதாக மாமுனிகள் விவரித்துள்ளார். முதல் நான்கு திருப்பதிகளாவன—

1. கோயில். 2. திருமலை. 3. திருக்குருகூர். 4. திருக்குறுங்குடி.

1. கோயிலில் வ்யூஹ குணம்.

2. திருமலையில் அந்தர்யாமி குணம்.

3. திருக்குருகூரில் பரவாஸுதேவ குணம்.

4. திருக்குறுங்குடியில் விபவ குணம்.

இந்த முறையில் குணங்கள் விளங்குவதாக வகுத்துள்ளனர். (இது மூலத்திலேயே ஸ்பஷ்டம்.) மேடி 4 சூர்ணைகளிலும் திருப்பதியைக் குறிப்பிடும்போதே இது வ்யூஹஸ்தாநீயம், இது அந்தர்யாமி ஸ்தாநீயம்.........என்பது ஸ்பஷ்டமாகும்படி சப்த விந்யாஸ முள்ளது.

1. கோயில் வ்யூஹஸ்தாநீயமாகக் கொள்ளப்பட்டது. வ்யூஹம் சயநஸ்தானமாதலால் (வன்பெருவானக மித்யாதி சூர்ணையில்) "இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி" என்றே வாசகமிடப்பட்டது. இதில் (திருக்கண்கள் வளர்கின்ற) என்பது உயிரானசொல். இதில் வ்யூஹகுணமான ஸௌஹார்த்தம் முக்கியமாக விளங்குமென்றார்.

(2) திருமலை. (இது நிற்க. இதில்தானே இப்போது விவாதம். இதைப்பற்றி முடிவில் எடுத்துக்கொள்வோம்.)

(3) திருக்குருகூர். இது பரத்வஸ்தானீயமாகக் கொள்ளப்பட்டது. பரமபதமானது *ஆதிப்பிரானவன் மேவியுறை கோயிலாதலால் அச்சொல்தொடையாலேயே இத்தலத்தைக் குறிப்பிட்டு இங்கே பரத்வகுணமான பரேசத்வம் பொலியுமென்றார்.

(4) திருக்குறுங்குடி. இது விபவ ஸ்தானீயமாகக் கொள்ளப்பட்டது. அது விளங்கும்படியாகவே "வைஷ்ணவ வாமனத்தில்" என்று இச்சொல்கொண்டே தலத்தைக் குறிப்பிட்டார். (வாமனன் விபவாவதாரமிறே.) இத்தலத்தில் விபவகுணமான லாவண்யம் பூர்ணமென்றார். (இனி ப்ரக்ருத விஷயம்)

2. திருமலை. இது அந்தர்யாமி ஸ்தானீயமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. கண்ணுக்குத் தோற்றுதபடி மறைந்திருப்பது அந்தர்யாமித்வம். இதை நிதியென்கிற சொல்லாலே முன்னோர்கள் வழங்கியுள்ளார்கள். கண்ணுக்குத்தோன்றாது மறைந்து கிடந்து ஸமயத்தில் உதவுகிற வைத்தமாநிதிபோன்றவன் அந்தர்யாமி. "ஸுகுஹிதெ நிதிரிவ ஸகல ஜஶெஷவந்ஸஹ" என்றது ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் 12-வது ச்லோகம். "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்று இத்தலம் (வேங்கடம்) நிதியாகக் கூறப்பட்டபடியால் இத்திருப்பதியை அந்தர்யாமி ஸ்தானீயமாகக் கொள்வதற்கு மிகவும் பொருத்தமுள்ளதென்று திருவுள்ளம் பற்றுகிறாராசிரியர். இத்தலத்தைக் குறிப்பிடவேண்டும்போது "மண்ணோர் விண்ணோர் வைப்பில்" என்றே குறிப்பிடவேண்டிய அவசியம் இப்போது நன்கு புலப்பட்டதாகும். தோஷபூயிஷ்டமான இடங்களிலெங்கும் உள்ளுறைந்து கிடப்பதானது தோஷபோக்யத்வகார்யமாதலால் அத் தலத்தில் *நிகரில் புகழாகிய வாத்ஸல்யம் ஜ்வலிக்குமென்றார். வாத்ஸல்யம் ஜ்வலிக்குமிடம் அந்தர்யாமித்வமாகவே யிருக்கவேண்டுமாதலால் அதை நன்கு தெரிவிக்குமதான வைப்பு என்கிற சொல் இருந்து தீரவேண்டியதாயிற்று. இந்த விவரணங்கள் அடியேனுடைய ஸ்வகபோல கல்பிதங்களல்ல; மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்திலேயே உள்ளன. அதை விரிய வுரைத்ததே இங்கு நமது பணி.

ஸாரமான முடிவு:—மூலத்தில் வைப்பு என்கிற பாடமில்லாவிட்டால் 'வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு' என்கிற பாசுரத்தை மாமுனிகள் உதாஹரித்ததும் 'உபய விபூதிக்கும் நிதியான திருமலையிலே' என்று பொருளுரைத்ததும் நிஷ்ப்பலமாகும். மூலத்திற்கு

ஸம்பந்தப்படாத ஒரு அக்ஷரமும் மாமுனிகள் எழுதுபவரல்லர். தவிர, வெற்பு என்கிற பாடமிருந்திருந்தால் அதற்கு உரிய சந்தையை மாமுனிகள் எடுத்துக்காட்டியிருக்கவேண்டுமே, அதைக் காட்டியருளாமையும் அந்தப் பாடம் அந்தபாடமென்பதற்கு முதல்ஸாக்ஷி. ஆக, வெற்பைக்காட்டாமல் வைப்பைக் காட்டினது, அதை விவரித்தது, அந்தர்யாமித்வம் இத்தலத்தில் விவக்ஷிதமாகக்கொள்ளப்பட்டதற்கு மிக அவசியமாக வைப்பு என்றிருக்க வேண்டுவது.' இத்தனை காரணங்களால் வைப்புதான் சுத்தபாடம், வெற்பு அஜ்ஞர் புகுத்தினபாடம் என்று நிர்ணயிக்க என்ன அருமை. வெற்பு பாடத்திற்கு ஒரு உபபத்திகூட காட்டமுடியாது. அபத்தக்களஞ்சியமான பதிப்பில் அப்பாடம் புகுந்துள்ளது என்கிற இந்த வொன்றே சொல்லலாம். அபத்தங்களை ஆமோதிக்கப்பிறந்தவர்களுங்கூட கதியில்லாமல் சில அபத்தங்களைத் தள்ளியே தீரவேண்டியிருப்பதால் அவற்றோடு கூடவே இந்த அபத்தத்தையும் தள்ளித் தொலைக்கவேண்டியது தவிர வேறில்லை.

## (2) ஆய்ச்சேரியிலே.

திருவண்பரிசாரத்தில் விளங்கும் திருக்குணத்தை விவரிக்கும் (173) சூர்ணையில் "ச்ரமமனஞ்சூழும் ஸௌகுமார்ய ப்ரகாசம் ஆய்ச் சேரியிலே" என்றிருந்த பாடம் (அச்சேரியிலே) என்று பிறழ்ந்துவிட்டது. இது மிகவும் தவறான—அர்த்தமற்றதான பாடம். மாமுனிகளின் வியாக்கியானத்தில் "ஆழ்வாருடைய திருத்தாயாரான உடைய நங்கையார்க்குப் பிறந்தகமாகையாலே ஆய்ச்சேரியான திருவண்பரிசாரத்திலே" என்றுள்ளது. மூலத்தில் போலவே வியாக்கியானத்திலும் "அச்சேரியான" என்று அச்சு விழுந்திருக்கிறது. அது எப்படி அந்வயிக்குமென்று புத்திமான்கள் விமர்சிக்கவேணும். தொலைவில்லிமங்கலமென்கிற திருப்பதியில் விளங்கும் குணத்தை யருளிச்செய்யும் சூர்ணையில் [கடித கடகவிகடநேத்யாதியில்] "அவ்வூரிலேத்விகுணம்" என்கிறார். அது மிக அழகு. தொலைவில்லிமங்கலப்பாசுரத்தில் "அவ்வூர்த் திருநாமம் கேட்பது சிந்தையே" என்றிருத்தலாலும், ஈடு முதலான வியாக்கியானங்களில் அவ்வூர் என்றதற்கு ஒரு ரஸப்பொருள் பணித்திருக்கையாலும் அவ்வூரென்றவாறே திருத்தொலைவில்லிமங்கலம் ஸம்ப்ரதாயஜ்ஞர்களுக்கு நினைவுக்கு வந்தே தீரும். அச்சேரியென்றால் ஒரு தலமும் பொருளாக வழியில்லை. ஆகவே ஆய்ச்சேரியிலேயென்பது தான் பொருத்தமான பாடம்.

## (3) தம் பிழையும் சிறந்த செல்வமும்.

மூன்றாவது பிரகரணத்தில் (156) ஏழாவது சூர்ணையான விதில் " தம் பிழையும் " என்றிருக்கவேண்டிய பாடம் (நம் பிழையும்) என்று தவறாக அச்சிடப்பட்டு, சிலருடைய அநுஸந்தானத்திலும் இந்தத் தவறு வந்திருக்கின்றது. நம்பிழையுமென்றால் அந்வயிக்கவே மாட்டாது. இந்த சூர்ணையைச் சொல்லுகிறவர் யாரோ அவரே (நம்) என்றதற்கு அர்த்தமாகவேண்டும. அவருடைய அநுபந்திகளான நாமும் அர்த்தமாகலாம். இவ்வளவேயொழிய ஆழ்வார் அர்த்தமாக மாட்டார். உண்மையில் ஆழ்வாரே இங்கு அர்த்தமாக வேண்டும். * அஞ்சிறையமடநாரையில் " என் பிழையே நினைந்தருளி யருளாத திருமாலார்க்கு " என்றருளிச் செய்ததையுட்கொண்டே சூர்ணிகை அமைக்கப்பட்டிருக்கின்றது. ஆழ்வாருடைய பிழையானது எம்பெருமானுடைய க்ஷமாகுணத்தை மறப்பித்ததாகவும், அதனை நினைப்பூட்டித் தூதுவிடுவதாகவும் அருளிச்செய்திருக்குமிவ்விடத்தில் (நம்பிழை) என்பதற்கு ப்ரஸக்தியே கிடையாது. இதற்கு விஷய வாக்யமான ஆழ்வார் பாசுரத்தில் "என் பிழையே " என்றிருக்கிறதேயொழிய (நம் பிழை) யென்றிருக்கவில்லை. ஆழ்வாருடைய வார்த்தையை அநுவதிக்கின்ற இந்நூலாசிரியர் (தம்பிழை) என்றே சொல்லத் தகுதியுள்ளது.

ஒருவன் "என் வீட்டுக்கு நான் போகிறேன்" என்றால், அதை அநுவதிக்கின்ற மற்றொருவன் 'அவன் தன் வீட்டுக்குப்போனான்' என்னவேணுமேயொழிய 'அவன் என் வீட்டுக்குப்போனான்' என்றோ 'அவன் நம் வீட்டுக்குப்போனான்' என்றோ சொல்லத்தகாதென்பதை விவேகிகள் உணர்வார்கள். ஆகவே இங்கு (நம்பிழையும்) என்கிற பாடம் ஒரு வகையாலும் இணங்காது. மூலத்திலுள்ள அச்சுப்பிழை மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்திலும் உள்ளதாதலால் அதையெடுத்துக்காட்டுவது பயனற்றதாம். தப்பைக்கொண்டு தப்பை ஸமர்த்திக்கப்பார்ப்பது தகுதியன்றே.

# அம்ருதலஹரி.

இப்பெயர்பூண்ட பத்ரிகை ஸ்ரீரங்கத்தினின்று மாதந்தோறும் வெளிவந்துகொண்டிருந்த விஷயம் பலரும் நன்கறிந்ததே. இடையில் சில அஸௌகரியங்களால் சில வருஷம் நின்றிருந்த இப்பத்திரிகை நேற்று சித்திரைமீ முதற்கொண்டு முன்போல் பிரசுரமாகி வருகின்றது. இதற்குமுன் 104 பத்திரிகைகள் வெளிவந்திருந்தபடியால் இப்போது 105 ஆம் பத்திரிகை 10—5—52 அன்று வெளி வந்துளது. இதில் வெளிவந்திருக்கின்ற வியாஸங்கள் இவை; 1. உபோத்காத வியாஸம். 2. பஞ்சாமிருதம். 3. மோக்ஷமாவது என்ன? 4. மதுரகவிதநப்ரபந்நர் யார்? 5. ஸ்ரீராமபாதுகா விசாரம். 6 "ரங்காஸ்தானே ரஸிக மஹிதே." இந்த வியாஸங்கள் தவிர "முமுக்ஷுப்படி ஸாரார்த்த தீபிகை" என்கிற நூலும் அநுபந்த வெளியீடாக வரத் தொடங்கி யிருக்கிறது. திருமந்த்ரார்த்த மென்று ப்ரஸித்தமான [பிள்ளைலோகாசார்யரருளிச் செய்த] முமுக்ஷுப்படி பதவுரையோடும் விசேஷவுரையோடும் அச்சாகி வருகிறது. இப்பத்திரிகைக்கு வருடச்சந்தா ரூ. 3 மாத்திரமே. ஆஸ்திகர்கள் யாவரும் இதை ஆதரிக்க வேணுமென்று கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள்.

கடிதமெழுத விலாசம் :—

**அம்ருதலஹரி ஆபீஸ்.**

ஸ்ரீ விலாஸம் பிரஸ், கீழ்ச்சித்திரை வீதி, ஸ்ரீரங்கம் (திருச்சி.)

## புஸ்தக விமர்சம்.

தூஷண நிராஸம். இப்பெர் பூண்ட வொருநூல் ஸ்ரீ. K. ஸ்ரீநிவாஸய்யங்கார், B.A., B.L., அட்வகேட். (புத்தூர் அக்ரஹாரம், திருச்சி) அவர்களால் இயற்றப்பட்டு ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனமென்னும் மாதாந்தப் பத்திரிகையின் சார்பாகவும் தனிப்புத்தகமாகவும் வெளிவந்திருக்கிறது. இது 36 பக்கங்கள் கொண்டது. உத்யாந பத்ராதிபரான ஸ்ரீமான். D. T. தாதாசாரிய ரென்பவர் பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளை தூஷித்தெழுதி யிருந்தவொரு க்ஷுத்ர க்ரந்தத்தை வெகு விரிவாகவும் யுக்தி யுக்தமாகவும் கண்டித்து உண்மைப் பொருளை நிலை நிறுத்தி யிருக்குமிந்நூல் ஸம்ப்ரதாய ரஸிகர்களான ஆஸ்திகர்களனைவரும் அவசியம் வாசிக்கத்தக்கது. இந்நூலில் 3-ம் பக்கத்திலுள்ள சில பங்க்திகளை மாத்திரம் இங்கெடுத்துக் காட்டுகிறோம்;

"........இப்படிப்பட்ட மஹாசார்யரை [பெரியவாச்சான்பிள்ளையை]யும் அவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளையும் தூஷிப்பதற்கு ஒரு வ்யக்தி—அதிலும் தன்னை வைஷ்ணவனென்று

சொல்லிக் கொள்ளும் ஒரு வ்யக்தி—தோன்றி யிருக்கிறதென்றால் இதைக் கலியின் கோலாஹலமென்றல்லால் வேறு என் சொல்வது? இப்புண்ணிய காரியத்தையே ஸ்ரீ. உ. வே. D. T. தாதாசாரியரென்னும் மஹான் 'ஸஜ்ஜநாராதநம்' என்னும் பொய்ப்பெயர் பூண்ட தொரு சுவடியில் செய்திருக்கிறார். சிலகாலமாக ஸ்ரீகாஞ்சீ உ. வே. P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிக்கும், அஹோபில மடத்தைச் சேர்ந்த வித்வான்கள் சிலர்க்குமிடையில் விவாதம் நடந்துவருவது உலகறிந்ததே. பல ப்ரமாணங்களை யெடுத்துக்காட்டி விவாதத்தில் தங்கள் பக்ஷத்தை ஸாதித்துக் கொள்ளவேண்டியதே முறையாயிருக்க, மடவித்வான்களிற் சிலர் பூர்வாசார்யர்களை தூஷித்துச் சுவடிகளெழுதுவதையே பணியாகக் கொண்டனர். அபத்தங்களான இத்தூஷணங்களுக்குப் பதிலெழுதி இவற்றுக்கோர் முக்யத்வம் கொடுக்கக் கூடாதென்றே நாம் இதுவரையில் வாளாவிருந்தோம். மேலே சொன்ன ஸஜ்ஜநாராதனம் என்னும் நூலிலும், மற்றும் சில வியாஸங்களிலும் (மீமாம்ஸார்ணவ) இத்யாதியான பல பிருதுகளைப் படாடோபமாகப் பிரகாசப்படுத்திக்கொண்டிருக்கும் ஒரு பண்டிதர் பரம காருணிகரான பெரியவாச்சான்பிள்ளையை வாசாமகோசரமாக தூஷித்திருப்பதனால் அந்த தூஷணங்களுக்கும்நாயனாராச்சான் பிள்ளையைப்பற்றிய ஒரு தூஷணத்திற்கும் மட்டும் நாம் பதிலெழுதுகிறோம்.'' என்று.

அபதார்த்தங்களான வ்யக்திகளின்மேல் இத்தனை ராமாஸ்த்ரங்கள் விடுவது அவசியமன்றென்று சிலர் கருதுகின்றார்கள். ஆயினும் சிலருடைய துஷ்ப்ரசாரங்களினால் உண்மைப் பொருள்கள் மறைந்து போகாதபடிக்கும் வஸ்து ஸ்திதியான பொருள்கள் ப்ரகாச மடையும்படிக்கும் இத்தகைய வெளியீடுகளும் அவசியமே யென்னலாம்.

K. P. T.

---

# விவாதங்களில் ஆர்ஜவம்.

வாதகேளிகளில் வெளிவரும் விஷயங்கள் அப்ராமாணிகமென்று கண்டிக்கப்பட்டால், அப்படி கண்டிக்கப்பட்ட விஷயங்களுக்கு ஒரு பதிலும் சொல்லாமல் அந்தத் தவறான விஷயங்களையே சிலர் திருப்பித்திருப்பி யெழுதிக்கொண்டிருப்பது ஆர்ஜவமாகாது. நஞ்சீயர் ஸ்ரீஸூக்தபாஷ்ய மருளிச் செய்ததாக ப்ரஸித்தியுண்டு. ஆனால் சில வருஷங்களுக்கு முன்பு சிலர் தேவநாகரிலிபியில் ஸ்ரீஸூக்த பாஷ்ய மொன்றையச்சிட்டு அதுதன்னை நஞ்சீயருடைய க்ருதியாக ப்ரசுரம் செய்தார்கள். அதை ப்ராமாணிகர்கள் ஆராய்ந்து அது நஞ்சீயருடைய க்ருதியன்று என்பதை மத்யஸ்தர்கள் ஏற்றுக்கொள்ளும்படியான உபபத்திகளுடன் பரக்க நிரூபித்து வெளியிட்டார்கள். அந்த நிரூபணங்கள் பிசகாயிருந்தால் பிசகென்று நிரூபித்து மத்யஸ்தர்களை யுகப்பிக்கவேணும். அது செய்யாமல், அந்த ஸ்ரீஸூக்த பாஷ்யத்தை நஞ்சீயருடைய க்ருதியாகவே மேன்மேலும் எழுதிக்கொண்டு போனால் இதற்கு என்ன அர்த்தம்? ஒருவன் இறந்து போய்விட்டானென்று தீர்ந்த பிறகும் அவன் உயிரோடிருப்பதாக வைத்து, அவன் சொல்லுகிறான், அவன் கூறுகிறான் என்று எழுதிக் கொண்டிருந்தால் ப்ராமாணிகர்கள் நகைக்க வேண்டியது தவிர வேறுண்டோ?

வே. திருமலை ஐயங்கார்,
பட்டர் திருமாளிகை. கோயமுத்தூர்.

# பகவத்விஷயரஸப்பெருக்கு.

(திருவாய்மொழி—1—6—1 பரிவதில்சனே.)

ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு திருக்குணத்தை அநுபவித்து வெளியிட்டுவருகிற முறைமையில் இத்திருவாய்மொழியில் 'ஆராதனைக்கெளியன்' என்கிற ஒரு திருக்குணத்தை வெளியிட்டருள்கிறார். இக்குணம் வடமொழியில் (ஸ்வாராத்யகத்வம்) 'ஸ்வாராதத்வம்' எனப்படும். [ஸ்வேந ஸுராயாதாயாஸேந ஸ்ராராய: தஸ்ய பாவ: ஸ்வாராயகத்வ.] சிரமமின்றி எளிதாகவே ஆராதிக்க உரியனுயிருக்குந்தன்மை என்றவாறு.

இதர தெய்வங்களிற் காட்டில் எம்பெருமான் எத்தனையோவிதங்களால் நெடுவாசி பெற்றிருப்பதுபோலே இவ்வகையாலும் நெடுவாசிபெற்றிருப்பன். 'ஆடு பலிகொடு, கோழி பலிகொடு' என்று அருந்தேவைகளை யிட்டு மஹா பரிச்ரம ஸாத்யங்களான ஆராதனைகளை அபேக்ஷித்திருக்கும் தேவதாந்தரங்கள். எம்பெருமான்படியோ அப்படியன்று; நாம் இட்டதுகொண்டு த்ருப்தியடைவதே அவனது ஸ்வரூபம் என்பது சாஸ்த்ரங்களில் தேர்ந்த விஷயம். அதுவே இத்திருவாய்மொழிக்கு ப்ரமேயம்.

கீழ்த்திருவாய்மொழியிலே நைச்சியத்தைச் சிந்தித்து அகன்ற ஆழ்வாரை எம்பெருமான் பொருந்தவிட்டுக்கொண்டது சீலகுணத்தாலெனப்பட்டது: அவன் சீலவானுயிருந்தாலும் அவனை ஆராதிக்கப் புகுமிடத்தில் குறைவில்லாமல் ஆராதித்துத் தீரவேண்டுமே; நாமோ க்ஷுத்ரர்களும் க்ஷுத்ரமான உபகரணங்களையுடையவர்களுமா யிராநின்றோம்; ஆனபின்பு எங்ஙனே அவனை ஆச்ரயித்து ஆராதித்துத் தலைக்கட்டுவது? என்கிற சங்கை அடுத்தபடியாக விளையக்கூடியதாதலால் அதனைப் பரிஹரித்துக்கொண்டு இந்தத் திருவாய்மொழி அவதரிக்கின்றதென்க.

எம்பெருமானுக்கு நாம் சில வஸ்துக்களை இடுவதானது அவனுக்கு ஏற்கெனவே யில்லாதவொரு பூர்த்தியை உண்டாக்குவதற்காகவா? நாம் ஸத்தை பெறுவதற்காகவா? என்று ஆராயவேண்டும்; அவனோ அவாப்தஸமஸ்தகாமன்; அன்னவன் நாமிட்டதுகொண்டு பூர்த்தியடைகிறுனென்பது அஸம்பாவிதம். கடலிலே மேகம் வர்ஷிப்பது கடல் நிரம்புவதற்காகவன்றே; "வஷ்ரஸிந்தோரிவாப்யைள ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப: = வர்ஷபிந்தோரிவாப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப:" என்று (ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்)—பட்டர் அருளிச்செய்தபடியே, தான் ஸத்தைபெறுதற்காகவே மேகம் கடலிலும் வர்ஷிக்கின்றதென்பது பரமார்த்தம். அதுபோலவே ஸ்வத: பரிபூர்ணனை பரமபுருஷன் திறத்திலே நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம்பெறுதற்கேயன்றி, அவனை நிரப்புவதற்கன்று என்பது வெளிப்படை. ஆகவே, நாம் சிறந்த பெரும் பொருள்களைத் தேடி ஆராதிக்கவேணுமென்பதில்லை; இடுகிறபொருள் எதுவாயினும், இடுவது ப்ரேமபூர்வகமாகவேணுமென்பதொன்றிலேயே நியதியுள்ளது.

* மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த திருமங்கையாழ்வாரும் "கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார்முளரியும் ஆம்பலும் முன்கண்டக்கால்'

புன்வாயோரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று, உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே" என்றருளிச் செய்கிறார். திருத்துழாய் முதலிய எந்த வஸ்துவைக் கண்டாலும் 'இது எம்பெருமானுக்குச் சாத்தத்தக்கது' என்று அத்யவஸாயங்கொள்ளாதாருடைய நெஞ்சை நெஞ்சாகக் கொள்ளமாட்டோமென்றுரைக்கின்ற இப்பாட்டில், எம்பெருமானுக்கே உரித்தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக்களுங் கூட்டியெடுக்கப்பட்டிருத்தலால், எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கவேணுமென்கிற சுத்தபாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லை; *செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி' என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவேயிருக்கவேணுமென்ற நியதியில்லை; ஏதேனுமொரு பூவாயிருக்கலாமென்பதும் பக்திப்பெருங்காதலே முக்கியமானது என்பதும் தோற்றுவிக்கப்படும்.

ஸ்ரீஜகந்நாதத்திலெம்பெருமான் செண்பகப்பூவை உகந்து சாத்திக்கொள்வது வழக்கமாதலால் முற்காலத்தில் சில ராஜகுமாரர்கள் அப்பெருமானுக்குச் செண்பகப்பூ ஸம்பாதித்து ஸமர்ப்பிக்கவேணுமென்று கடைவீதியேறச் சென்றனர்; அங்குப் பூவெல்லாம் விற்றுப்போய் ஒரே ஒரு பூ மாத்திரம் மிகுந்திருந்தது. விலைக்கு வாங்கவந்த ராஜகுமாரர்கள் செல்வச்செருக்குடையவராதலால் ஒவ்வொருவரும் இப்பூவை நாமே பெற்றுப்போய் ஸமர்ப்பிக்கவேணுமென்கிற ஆவல்கொண்டவராகி மேன்மேலும் விலையையேற்றிக்கொண்டே வந்தார்கள். கடைசியாக அளவற்ற விலைகொடுத்து ஒரு ராஜபுத்திரன் அதை வாங்கிப் பெருமானுக்குச்சாத்த, அன்றிரா அவனுடைய கனவிலே எம்பெருமான் காட்சிதந்து 'நீ இட்ட பூ எனக்குக் கனத்துச் சுமக்கவொண்ணாததாயிருக்கின்றது' என்றருளிச்செய்தான்—என்ற இதிஹாஸமும் அப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளையாலருளிச்செய்யப்பட்டுள்ளது. இதனால், ஸ்நேஹபூர்வகமாகப் பூவிட்டால் அதுவே எம்பெருமானுக்கு அலப்யலாபமாயிருக்குமென்றதாகும். இது புஷ்பவிஷயமொன்றில் மாத்திரமன்று; நாம் பகவானுக்கு இடுவது எதுவானாலும் அஃதெல்லாவற்றிற்குமே இந்த நியாயம் ஒக்கும்.

கீதாசார்யனும், *[illegible] = பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி, ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந: * என்றருளிச்செய்கிறான். இடுகிற பொருளில் வாசி பார்ப்பதில்லை, இடுகிறவன் நெஞ்சில் ஈரமுள்ளதா என்பதொன்றையே பார்ப்பேன் என்றன்றோ இதிற்சொல்லுவது. *[illegible] = அந்யத் பூர்ணதபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத், அந்யத் குசலஸம்ப்ரச்நாத் ந சேச்சதி ஜநார்த்தந: * என்றும் * [illegible] = யா: க்ரியாஸ் ஸம்ப்ரயுக்தாஸ் ஸ்யு: ஏகாந்தகதபுத்திபி:, தாஸ் ஸர்வா: சிரஸா தேவ: ப்ரதிக்ருஹ்ணாதி வை ஸ்வயம் * என்றுமுள்ள ப்ரமாண சதங்களாலும் எம்பெருமான் ஆராதனைக் கெளியனென்பது விசதீகரிக்கப்பட்டுள்ளது. அந்தத்திருக்குணத்தையே இத் திருவாய்மொழியில் ஆழ்வார் அநுபவித்து வெளியிட்டருள்கிறார். (*)

பரிவதிலீசனைப்பாடி விரிவதுமேவலுறுவீர் *
பிரிவகையின்றிநன்னீர்தூய் புரிவதுவும்புகைபூவே.

(பாசுரத்தின் கருத்து.) துக்கமற்ற ஸர்வேச்வரனைத் துதிசெய்து ஸ்வரூபவிகாஸத்தைப் பெறவேணுமென்கிற உறுதியுடையவர்களே!, ப்ரயோஜனமேதேனுங்கொண்டு விலகிப்

போதலின்றியே நல்ல தீர்த்தத்தை ஸமர்ப்பித்து அதன்பிறகு ஸமர்ப்பிப்பதும் ஏதேனுமொரு தூபமும் ஏதேனுமொரு புஷ்பமுமேயாகும்.

எம்பெருமானை ஆராதிக்கு முபகரணங்களின் ஸௌகர்யம் இப் பாசுரத்தில் அருளிச்செய்யப்படுகிறது. எம்பெருமானைப்பற்றிச் சொல்லுகின்ற சாஸ்த்ரங்கள் அவனை 'அகிலஹேய ப்ரத்யநீகன்' என்கின்றன; ஹேயகுணங்களெல்லாவற்றிற்கும் அவன் எதிர்த்தட்டானவன் என்றபடி. அவனிடத்திலுள்ளவை யெல்லாம் கல்யாணகுணங்களேயன்றி ஒருவகையான ஹேயகுணமும் இல்லாமையால் அங்ஙனஞ் சொல்லுகிறது. அந்த ஹேய ப்ரதிபடத்வமே இங்குப் 'பரிவதில்' என்ற விசேஷணத்தினல் கூறப்படுகின்றது. துக்கமில்லாதவன் என்றது, மற்றுமுள்ள ஹேயகுணங்களொன்றுமில்லாமையைச் சொன்னபடிக்கு உபலக்ஷணம்.

எம்பெருமானுக்கு துக்கமில்லையென்று சொல்லிவிட முடியுமோ? விபவாவதாரங்களிலே ஸீதாவியோகம் முதலான நிமித்தங்களினல் வாசாமகோசரமாகத் துயருற்றமை இதிஹாஸ புராணங்களில் ஸித்தமாயிருக்கின்றதே; துக்கமில்லாதவனென்று எங்ஙனஞ் சொல்லலாம்? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; அவதாரங்களில் உண்மையான துக்கமில்லை; அது அபிநய மாத்திரமே யென்பது ச்ருதப்ரகாசிகை முதலியவற்றில் நிர்ணயிக்கப்பட்டிருத்தலால் இந்த சங்கைக்கு இடமில்லை. ஸீதா வியோகாதி நிமித்தங்களினுலுண்டாகின்ற துக்கம் அபிநயரூபமென்று சொல்லிவிட்டாலும், எம்பெருமானை 'தயாளு' என்கிறசையும் போது, "தயையாவது—பிறர்படும் துக்கத்தைக்கண்டு தானும் துக்கப்படுகை" என்று ஆசிரியர்களால் நிர்வஹிக்கப்படுவதால், இந்த துக்கத்தையும் அபிநயரூபயென்று அங்கீகரிக்க வொண்ணுதே; இதற்கு எங்ஙனே ஸமாதானமென்று சிலர் சங்கிப்பதுண்டு; 'இது ஹேயப்ரத்யநீகத்வத்திற்கு விரோதியன்று' என்பதே சுருக்கமான ஸமாதானம். துக்க ஸாமாந்யமும் ஹேயமன்று; ஸ்வார்த்தமாகப்படும் துக்கமே ஹேயமாகும்; பிறர்படும் இழவைக்கண்டு தரித்திருக்கமுடியாமல் பரவசமாகப் படுகின்ற துக்கம் ஹேயமன்று, மிகவும் உபாதேயமாகவேயாகும்.

இதனைச் சிறிது விவரிப்போம்;-பிறர்படுகின்ற துக்கத்தைக்கண்டு துக்கப்படுவதென்பது குணமா? தோஷமா? என்று விமர்சிக்கவேணும். ஸ்ரீராமாயண. அயோத்யா காண்டத்தில் ஸ்ரீராமபிரானுடைய திருக்கல்யாணகுணங்களைச் சொல்லிக்கொண்டு வரும் பிரகரணத்தில் "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:" (பிரஜைகள் துக்கப்படுங் காலங்களில் ஸ்ரீராமன் மிகவும் துக்கப்படுகிறான்) என்று சொல்லப்பட்டிருப்பது ஒருபுறம் நிற்க. உலகத்தில் ஒருவன் துக்கப்படும்போது அந்த துக்கத்தைக் கண்டுகொண்டிராநின்ற மற்றொருவன் தானும் துக்கப்படாமல் வாளாகிடந்தால் அவனைக் கல்நெஞ்சனென்றும் ஈரநெஞ்சு இளநெஞ்சு இல்லாதவனென்றும் வசை கூறுவதும், பிறர் துக்கிப்பதைக்கண்டு பரவசமாக ஒருவன் துக்கிப்பானுகில் அவனை ஈரநெஞ்சனென்றும் இரக்கமுள்ளவனென்றும் பரம தயாளுவென்றும் சொல்லிப் புகழ்வதும் இன்றாக ஒருவராலும் அபலாபஞ் செய்யவொண்ணுதவை. ஆகவே பரது:க்க து:க்கித்வமென்பது சிறந்த குணங்களில் முதன்மையாகக் கணக்கிடக்கூடியதேயன்றி துர்க்குணமாக ஒருவராலுங் கூறவொண்ணுதது. இப்படிப்பட்ட வொரு சிறந்த குணம் எம்பெருமானுக்கு இல்லையென்று எங்ஙனே சொல்லலாகும்?

ஆனல் இங்கு ஒன்று சொல்லலாம்; பிறர்படும் துயரத்தைப் பரிஹரிக்கக்கூடிய சக்தி நமக்கில்லாமையாலே நாம் அத்துயரத்தைக்கண்டு துயரப்படலாம்; பரிபூர்ண சக்தியுக்தனன

எம்பெருமான் எளியெனும்பரான நம்மைப்போலன்றியே பிறருடைய துயரத்தைக்கண்டு தானும் துயரப்படக் காரணமேயில்லை—என்னலாம்; இங்குக் குறிக்கொள்ளவேண்டியதாவது—பிறர்படும் துயரத்தைக்கண்டு துயருறுகை என்கிற ஒரு தன்மையும், பிறர்படுந் துயரத்தை நீக்கவல்ல சக்தியுடைமையென்கிறவொரு தன்மையும் பரஸ்பர விருத்தமென்று நினைக்கலாகாது; உண்மையில் இவை ஒன்றோடொன்று விரோதமுடையனவல்ல; தன் குழந்தைக்கு ஒரு துன்பம் நேர்ந்துவிட்டால் அதனை உடனே பரிஹரிக்கவல்ல சக்தி மாதாவுக்கு இருக்கச்செய்தேயும் அப்படியே அத் துன்பத்தை அவள் பரிஹரித்துவிடச் செய்தேயும் 'குழந்தைக்குத் துன்பம் நேராமல் காக்கவேண்டியது நமது கடமையாயிருந்தும் ஏமாந்து போனோமே!, அந்தோ! அநியாயமாய்க் குழந்தையைத் துடிக்கவிட்டோமே!, என்று பலவாறாகக் கதறி வருந்தும்படியைக் காணாதாருண்டோ?

துச்சாஸநன் கையிலே த்ரௌபதி பரிபவப்பட்டுக் கூவினபோது கண்ணபிரான் ஒருவாறு அவளது துயரைத் தீர்த்திருக்கச் செய்தேயும் ஐயோ அவள் கூவினபோது நான் நேரில் சென்றிருந்து உதவாதொழிந்தேனே!, ஐயோ! அவளுக்குப் பரிபவம் நேர்ந்து அவள் கதறினபின்பு நான் அதைப் போக்கினேனேயன்றி, முதல் தன்னிலே பரிபவமே உண்டாகாதபடி ஜாகரூகனாயிருக்கை தவிர்ந்தேனே! அவளுக்கு நான் பெரிய கடனாளியாய்விட்டேனே! என் பிறப்பு என்னாயிற்று!' என்று தன் காவற் சோர்வை நினைத்துத் திருவுள்ளம் வேவுண்டு பலவாறு கதறினபடியுண்டே. இது விஷயமாக ஆசாரியர்கள் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—

> "த்ரௌபதி சரணமென்ற உக்தியைத்தனையும் திருவுள்ளத்திலே கிடந்து, ஸதஸ்ஸில் அவள் பரிபவித்த பரிபவத்தையும் பரிஹரித்து துர்யோதநாதிகளையும் நிரஸித்து தர்மபுத்ரன் தலையிலே முடியையும் வைத்து இவள் குழலையும் முடிப்பித்துப் பின்பும் *ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்பதி* என்று குறைவாளனாய்ப் பரமபதத்துக்கு எழுந்தருளுகிறபோதும் *நாதிஸம்ருத்தம் நயனௌ* என்னும்படி திருவுள்ளத்தில் புண்ணோடேயிறே எழுந்தருளிற்று"

இத்யாதி.

மடுவின்கரையிலே முதலைதன்னலடர்ப்புண்ட ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய இடரை எம்பெருமான் தீர்த்தருளினனேனும் அவன்றான் பட்ட பரிதாபம் பேச்சுக்கு நிலமன்றே. "ஸம்ரம்ப்ரஸங்க ... நிரங்க... =ஸ்ரக்பூஷாம்பரமயதா யதம் ததாநோ திங்மாமித்ய நுகஜகர்ஜமாஜகந்த" என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே பட்டர் அருளிச்செய்தமை கண்டீரே. கெட்டேன்! கெட்டேன்!! என்று நொந்துகொண்டே எம்பெருமான் அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்தானென்றால் இது என்கொல்!

ஸஹஸ்ரநாமத்தில் 'ஶுசி:' என்னுந் திருநாமத்தின் பாஷ்யத்திலும் இதனை விளக்கியருளினர் பட்டர். ஆழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில், "விஶ்வம் நியைவ விநிசய்ய நிசாய்ய பூய: ஸஞ்ஜஹ்ருஷஸ் ஸதிஸமாச்ரிதவத்ஸலத்வே, ஆஜக்முஷஸ் தவ கஜோத்தம ப்ரும்ஹிதேந பாதம் பராமம்ருஶு ஷோபி ச கா மநீஷா?" = விச்வம் நியைவ விசய்ய நிசாய்ய பூய: ஸஞ்ஜஹ்ருஷஸ் ஸதிஸமாச்ரிதவத்ஸலத்வே, ஆஜக்முஷஸ் தவ கஜோத்தம ப்ரும்ஹிதேந பாதம் பராமம்ருசு ஷோபி ச கா மநீஷா?" என்றருளிச்செய்தார். எம்பெருமான் தான் சாத்தியருளின திருப்பரிவட்டத் தலைப்பைச் சுருட்டித் திருப்பவளத்திலே வைத்து ஊதி கஜேந்த்ராழ்வானுடைய

புண் வாயை வெதுகொண்டு திருக்கையாலே குளிரத் தடவிக்கொடுத்தானென்றால் அந்த ஸமயத்திலே எம்பெருமான் திருவுள்ளத்திற் கொதிப்பு வாசாமகோசரமன்றோ?

ஆகலால் இப்பாட்டில் பரிவதிலீசன் என்றது ஹேயமான துக்கமில்லாதவன் என்றபடியாமத்தனையென்று தலைக்கட்டிற்றாயிற்று.

ஈசனை = நமக்கென்று ஏற்பட்ட ஸ்வாமியை என்றபடி. உலகத்தில் ஒருவனுக்கு ஒருவன் விருந்திடும்போது நெடுநாளாக ஒரு நல்லபொருளைச் சேகரித்து விருந்திட்டால் 'இதை இவன் ஸ்வீகரித்து என்ன குறை சொல்லப்போகிறானோ' என்று நெஞ்சு தளும்பியிருக்க வேண்டிவரும். புத்திரன் பிதாவுக்கு விருந்திட்டால் விருந்தில் ஏதேனுங் குறையிருந்தாலும் அது தகப்பனுடையதாய் நெஞ்சாறல்படவேண்டாதிருக்குமன்றோ; அப்படிப்பட்ட ஸம்பந்தம் எம்பெருமானுக்கும் நமக்குமுண்டென்று காட்டினபடி.

பாடி = பெரியவர்களின் ஸந்நிதானத்திலே வாயைத் திறவாமல் மௌனமாயிருக்க ப்ராப்தமாயினும், ஆனந்தம் உள்ளடங்கியிருக்கமாட்டாமல் வாய்விட்டுப்பாட நேர்ந்துவிடுமென்க. பரமபதத்திலே *ஹாவு ஹாவு ஹாவு* என்று சொல்லப்பட்ட பாடுதல் இங்கே விவக்ஷிதம். [பாடி விரிவது மேவலுறுவீர்.] இந்த ஸம்ஸார நிலத்திலிருக்கும் வரையில் சேற்றிலழுந்தின மாணிக்கம் ஒளி சுருங்கியிருக்குமாபோலே ஆத்மாவுக்கும் ஞானநந்தாதிகள் விரிவின்றிச் சுருங்கியிருக்கநேருமே; அந்தச்சுருங்குதல் தொலைந்து ஸ்வரூப விகாஸத்தைப் பெறவேண்டி யிருப்பவர்களே! என்று முமுக்ஷுக்களை விளித்தபடி.

அப்படிப்பட்ட கனத்தபேறு பெறுதற்குச் செய்யவேண்டுவதென்னென்ன; க்ஷுத்ர பலன்களைப் பெற்று அவனை விட்டுப் பிரிந்துபோவதல்லாமல், ஏதேனும் தீர்த்தத்தை ஸமர்ப்பித்து ஏதேனுமொரு பூவையிட்டு ஏதேனுமொரு புகையைக் காட்டினாலும் போதுமென்கிறார் பின்னடிகளில்.

இப்பாசுரத்தை பட்டர் உபந்யஸிக்கும்போது "புரிவதுவும் புகை பூவே" என்ற சப்தஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளம்பற்றி 'இவ்விடத்தில் அகில்புகையென்றாவது கருமுகைப்பூ என்றாவது சிறப்பித்துச்சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும் ஏதேனும் ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகையிட்டும் புகைக்கலாம், கண்டகாலிப்பூவுஞ் சூட்டலாம் என்று உபந்யஸித்தாராம். அதை நஞ்சீயர்கேட்டு "ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச்சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச்செய்யலாமோ' என்று கேட்டார்; அதற்கு பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி:—"சாஸ்த்ரம் மறுத்ததுமெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுத்தபடியன்று; அடியார்கள் அப்பூவைப் பறித்தால் கையில் முள் பாயுமே என்று பக்தர்கள் பக்கலில் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததெயன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லை" என்றாம். இதர ஸம்ப்ரதாயத்திலுள்ள வியாக்யாதாக்கள் சிலர் இந்த ஸம்வாதத்தைக்கண்டு ரஸியாமல் திரஸ்கரித்துரைத்திருப்பதில் விவேகிகட்குக் கண் செல்லாது. அருளிச்செயல் தொடையழகை நோக்கி ரஸப்பொருளுரைத்த விதில் குதர்க்கவாதஞ் செய்கை மனக்குற்ற மாந்தர்க்குரியதே.

பிரிவகையின்றி = இதற்கு இரண்டு வகையாகப் பொருள் கொள்ளலாம்; ஐச்வர்யம் ஸந்தானம் கைவல்யம் முதலான அற்ப பலன்களைக்கேட்டுப் பெற்றுக்கொண்டு அவனைவிட்டுப் பிரிந்து போய்விடாமல் என்பது ஒருவகை. (கீழ்த்திருவாய்மொழியிற்போலே) நைச்சியாநுஸந்தானம் பண்ணி அகன்றுபோய்விடப் பாராமல் என்பது மற்றொருவகை.

நன்னீர் = நல்ல நீர் என்றது சுத்த ஜலம் என்றபடியாய், 'சுத்த கங்கை' என்றால் யமுனை ஸரஸ்வதி முதலிய இதர நதிகள் கலசாத வெறும் கங்கை என்று பொருளாவதுபோல ஏலம் லவங்கம் முதலிய இதர வஸ்துக்கள் சேராத வெறும் தீர்த்தம் என்றவாறாம்; இதனால் ஆராதனைக்கெளிமைதோற்றும்.

* * *

# வானமாமலையின் விசேஷம்.

நம்மாழ்வாருடைய விசேஷமான ஈடுபாட்டுக்கு நிலமான வானமாமலைத் திருப்பதியில் தற்காலம் ஆஸ்தானமலங்கரித்தருளா நின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஜீயர் ஸ்வாமியின் விசேஷ ச்ரத்தை யடியாகப் பல விதமான கைங்கரியங்கள் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்ற விஷயம் நாடு நகரமும் நன்கறிந்ததே. ஆழ்வார் திருநகரியில் பொலிந்து நின்ற பிரானுக்கும் நம்மாழ்வார்க்குமாக ஒரு லக்ஷ ரூபாய்ச் செலவில் வெள்ளித் திருத்தேர் மிக அற்புதமாக அமைக்கப்பட்டுச் சென்ற மாசித் திருநாளில் ஸ்ரீ ஸ்வாமி ஸகல பரிஜந பரிவாரங்களுடனும் திரு நகரிக்கு எழுந்தருளி யிருந்து அந்த ரதமஹோத்ஸவத்தை விசேஷ வைபவமாய் நடத்திவைத்தருளின பெருமைகள் உலகறிய நின்றன. நேற்று 12—5—52 தேதி முதல் ஸ்ரீவானமாமலை ஸந்நிதியிலே விமாநாதி ஸம்ப்ரோக்ஷணச் சிறப்பு ஏழுநாள் வரையில் வாசாமகோசரமாக நடைபெற்றிருக்கின்றது. அது ஸம்பந்தமான விவரணங்கள் அடுத்த இதழில் வெளிவரும்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீவானமாமலை ஜீயர் ஸ்வாமியின் ஜகத்ப்ரஸித்தமான ஸர்வதோமுக நாநா சாஸ்த்ர பாண்டித்யமும் சமதமாதி குண ஸம்பத்தியும் அந்யாத்ருசமான ஔதார்ய விசேஷமும் கைங்கர்ய ஸாம்ராஜ்ய பட்டாபிஷிக்தத்வ ப்ரக்யாதியும் நாற்றிசையிலுமுள்ள ஆஸ்திகர்களை விசேஷித்து மங்களாசாஸந ப்ரவணர்களாக்குகின்றன. “வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே” என்கிற பல ச்ருதி இந்த ஸ்வாமு திறத்தில் விசேஷேண பலிக்க வேணுமென்பதே ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களினுடையவும் ஸமகண்டமான ப்ரார்த்தனையாகும்.

## மதிப்புரை.

வேதாந்தரக்ஷாமணி விமர்சம் :—திருச்சியில் எழுந்தருளியிருக்கும் ஸுப்ரஸித்த வித்யாநிதியான ஸ்ரீ-உ-வே. ஏ. வி. கோபாலாசார்யஸ்வாமியின் விலையுயர்ந்த நிபந்தங்களுள் இது தலைசிறந்ததென்பதை ஸகல பண்டிதர்களும் நன்கறிவர். இதன் நான்காவது பாகம் இப்போது வரப்பெற்றோம். அந்தராதிகரணம் முதல் பாஞ்சராத்ராதிகரணம் வரையில் அற்புதமான விமர்சம் இதிலுள்ளது. “இது ஸ்ரீ கோபாலாசாரியஸ்வாமியின் க்ருதி” என்று தெரிவிப்பதற்கு மேற்பட அதிகமாக நாம் எழுதுவது உண்மையில் அதிகப்ரஸங்கமேயாகும். பகவத்பாஷ்யகார ஸித்தாந்த ரக்ஷணத்தில் இந்த ஸ்வாமிக்குள்ள ஊக்கம் மற்று எவர்க்குமில்லையென்றால் மிகையாகாது. ஸர்வாத்மநா விச்ராந்தியோடிருக்கவேண்டிய இம்முதிர்ந்த பிராயத்திலும் இந்த மஹான் அல்லும்பகலும் ஒய்வின்றி இத்தகைய அப்ரதிம கைங்கரியங்களை அவலீலையாகச் செய்துவருவது வியக்கத்தக்கதே. 150 பக்கமுள்ள இப்புத்தகத்தின் விலை இரண்டே ரூபாய். (தேவநாகரலிபி.)

## ஓர் அறிக்கை.

சில வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீராமாநுஜனில் வெளியிடப்பட்டுவந்த ஆங்கில பாஷைத் திருப்பாவை இதுவரை முற்றுப்பெறுமலேயிருந்தது. பல அன்பர்களின் கோரிக்கைக்கிணங்கி அது இப்போது முடிவு பெறுவிக்கப்பட்டது. அதில் 12 பக்கங்கள் இப்பத்திரிகையில் சேர்க்கப்பட்டன. ஆங்கிலத்தில் விசேஷ பரிசயமுள்ளவர்களென்று நாமறிந்த நபர்களுக்கே அந்த பாரங்கள் சேர்ந்த பத்திரிகையை அனுப்பியிருக்கிறோம்.

மானேஜர்—ஸ்ரீராமாநுஜன்.

